


சிவமயம்

சிவப்பிரகாச[illegible]ளையா [illegible]

இவை

# தத்வராயஸ்வாமிகள்

அருளிச்செய்தன.



இந்தவிரண்டுடன்

## தத்வாமிர்தக்கட்டளையும்.

காஞ்சிபுரம்.

சுத்தவைதிகசைவாசாரியருளொருவராகிய

சண்முகதேசிகர்குமாரர்

## அருணாசலதேசிகர்

முன்னிலையிற்பரிசோதித்து

கொன்றைமாநகரம்.

ம-௱-௱-ஸ்ரீ

## முருகப்பமுதலியார்குமாரர்

## அருணாசலமுதலியா

## ரவர்களால்.

தேசாபிமானிஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

ஶாலிவாஹநஶகாப்தம், ௲எ௱௨௰௩-வது.

பிலவஞுவைகாசிமீ

இதன்விலைரூபா-க.

1901

உ

சிவமயம்,

அச்சிற்பதிப்பித்தவர்.

# சிறப்புப்பாயிரம்.

(நேரிசையாசிரியப்பா.)

பூவருநான்முகப் - புத்தேள்படைத்த, பாவருமண்டம்
பற்பலகோடியு, ளுயர்ந்ததிவ்வண்ட - மோங்கதிற்சிறந்தது,
யத்தபூவுலக - நவிற்றதிற்பொலிந்தது, சம்புத்தீவதிற் - றச்
கதுதென்றிசை, பம்பதிலுயர்ந்தது - பாரதகண்ட, மற்றதிற்
றிகழ்ந்தது - வண்டமிழ்நாடதில், வெற்றிசேர்சைவ - சமயமெ
ய்க்குரவரா, மொப்பில்சம்பந்த - னுதித்திடுங்காழியிற், செப்
புவாகீசன் - றிருவாமூரிற், றீதிலாச்சுந்தரன் - சேர்நாவலூரி
ல், வாதவூரண்ணல் - வருமப்பதியுடன், சடகோபன்வரு - சால்
புறுகுருகையி, னிடமார்ந்தற்புத - மியைதிருவீழியி, லந்நால்வ
ருணத் - தாதியாம்வருணரின், மன்னுந்தத்துவ - வாதிகண்மரபி
னிற், செந்தமிழ்நாடு - செய்தவமிவணாத், தந்ததென்னத் - த
ரணிவந்தவரிற், புலவர்சிகாமணி - போதகர்சிகாமணி, கு
லமறையவர்கள் - கோதில்சிகாமணி, யான்றவர்சிகாமணி - யா
ரியர்சிகாமணி, சான்றதத்துவநூல் - சாற்றினர்சிகாமணி, வித்
துவராயர் - வியந்திடலொழியாத், தத்துவராயத் - தனிப்பெ
யர்மேக, முலகநூல்போலா - துடலமெடுத்த, பலனடைநூல்
கள் - பலவினுஞ்சிறந்த, விருக்குமுதலா - வீரிரண்டென்னு

பெருக்கார்வேதப் - பெருங்கடலதனுட், டபவருந்துவி
ம - சார்பெனுமுவர்கெடுத், துபநிஷத்தென்னு - மொண்புன
ல்பருகிச், சிவப்பிரகாச - சிகரமேற்கொண்டு, தவப்பிரகாச
ர் - தங்கிடனுறி, யரூபானந்த - மடுத்தவர்க்களிக்குஞ், சொ
ரூபானந்தச் - சோதிமால்வரைமேற், செப்புபல்கருமத் - தீ

வயிலெறிக்கு, மிப்பவக்கோடைதீர்ந் - திவ்வுலகுய்ய - வே
வேமுக - விரைந்துடன்பொழிந்த, பேறமைசாத்திரப் - பெ,
ம்பிரவாகமாந், திருத்தாலாட்டொளி - திகழ்பிள்ளைத்தமிழ்
ரத்தினையருள்வெண் - பாவந்தாதி; துன்னியசீர்க்கலித் - துறை
ந்தாதி, சின்னப்பூவெண் - பாத்திருத்தசாங்க, மும்மணிக்
காவை - நான்மணிமாலை. மம்மர்நீக்கிரட்டை - மணிமாலையி
னுடு, கலிப்பாக்கலம்பக - முலாச்சிலேடையுலாத், துலக்குநெ
ஞ்சுவிடு - தூதுகலிமட, லஞ்ஞைவதைமோ - கவதைப்பரணிக,
ஞ்சமாரமிர்த, சாரவெண்பாவெனும், பதினெண்ணூலும் - பா
துறையும், முதிரிருதிரட்டு - மொழிந்திடும்பிறவு, மிடைநெ
நாட்பட - லாலெவரிடத்து, மடையவுமகப்படா - தருகலை
நோக்கித், தராதலத்திற்புதி தாச்செய்திடலிற், புராதனநூலை
- போற்றனன்கெனவெணிப், பலதேயத்தினும் - பலமட
களினு, நலமுறுபுலவரா - னுட்பலநாடி, வருந்திச்சேர்த்து
வயகமடந்தை, திருந்துமாமுகமாய்த் - திகழ்தொண்டைநாட்
, லம்முகத்திலதந் - தலைநிலாலயங்கொண், டிம்மகிதலமே-
இலங்குசீர்க்காஞ்சியி, லநிவர்ணுச்சிர - மத்திலுதித்து, முதிரு
ஞ்சிவாகம - முறையினுணர்ந்து, தபுதவினல்வர்செய் - தமிழ்வே
கமுமுணர், உபயகவிகளி - லொருவனுமெனன், அச்சரவணபவ-
னருளானிறைந்த, கச்சிப்புலவன் - காமருமரபின. னிலக்கிய
விலக்கண - மெனுமிருகடலி, னலக்கணில்லா - வகன்கரைக
ண்டோன், வேதாந்தத்தொடு - விளங்கியசைவப், போதா
ந்தநூலும் - புரையறவுணர்ந்தோன், மன்னியசுத்த - வைதிக
சைவத், தன்னிகர்குரவரிற் - றலைமைபூண்டோன், சண்முகதே
சிகன் - தருமாதவத்திற், றண்முகனுகித் - தரையிடையுதித்தோ
ன், றேரருணசல - தேசிகன்றன்பா, லாருமநூல்க - ளனைத்தையு
மளித்து, வரையவர்தம்மால் - வருபிழைமுற்றும், புரையற
த்திருத்திப் - பொறியாவெழுத்திற், றீட்டியகருதிச் - சிவ
ப்ரகாசத்தொடு, நாட்டியதத்துவாமிரதமக்கட்டளை, மூன்றை
யுமச்சினின் - முத்துறப்பதித்தனன், கான்றதேம்பொதும்பர் - க
கனகூடத்தையுந், தெங்குவிண்ணுலகையுந் - திரள்கமுகதன்கீ

ழ்ச், தங்கியநாளையுந் - காற்றுக்கருவிகள், மதிமண்டலத்தை
ம் - வரர்களையதன்கிழ்க், கதிர்மண்டலத்தையுங் - கதிர்த்தெ
ஞ்சாலி, தொண்மூமலைவயுமவராங் - கொன்றைமாநகரோன், வெ
ண்மதிக்கவிகை - வேந்தருமதிப்போன், கங்காகுலத்தர் - கள
த்திடவந்தோன், கொங்கார்ந்தளிமுரல் - குவளையத்தொடை
யா, வரைகைக்கோவு - மவாம்பெருநிதியான், வளர்கைக்கொ
டையான் - மழையையும்வென்றோன், பண்டைஞான்றுலகிற்
பாண்டியனைப்போற், றண்டமிழ்வளர்ப்பான் - சார்தருநிபுண
ன், அவ்வியர்போலா - தான்றவிந்தாடுஞ்,செவ்விநிறுறச்செயுஞ்
-தேசாபிமானி, தேவாசிரியனுந் - தேர்வருமொன்றை, நோ
வாநுணரு - நுண்ணறிவாளன், எண்ணலர்க்கரியே - றேய்
ந்தவனேனு, நண்ணினர்க் கன்பு - நயந்துமுன்னிற்போன்,
சயந்தனைப்பெற்றுத் - தருவினைக்கைக்கொண், டினைந்துந
ற்புலவனா - யினிநிற்காத்துப், பொருவறுபோசம் - பொருந்
தியசெயலா. லிருவிழியொடுபுவி - யிடைவருமிந்திரன், வைய
கமுழுதாள் - மன்னர்தங்கொடியையு, மெய்ந்நிலைபெறச்செய
மேழிக்கொடியின,னுவின்கிழத்தி - நண்ணியவிடத்திற், பூவி
ன்கிழத்தி - பொருந்தாளென்று, முதுமொழிதனக்கு முதிர்
பகையாகக், கருவியசெல்வமுங் - கல்வியுமுடையோன், கற்
றோரவையிற் - கல்வியினுனு, மற்றோரவையின் - மாண்பொ
ருளானு, முந்துறச்செய்த - முருகப்பவேளெனுந் - தந்தையி
வனைத் - தரற்கருந்தவமு, னென்றேற்றனன்கொலென் - றெ
வரும்வியப்ப,வன்னோன்றனிலு - மரும்புகழ்படைத்தோ,னு
ணகன்வாழ்பவரினுநினுமெய்ஞ்ஞானச்சனகன்வாழ்வதனிற் - சா
லுமெய்யறிவினன், முத்தமிழ்த்துறையின் - முயங்கலெஞ்ஞா
ன்றும்,வித்தகமில்லா - விளையாட்டானேன்,சங்கமுடனஞ் சக்
கரந்தாங்கி,யிங்களித்திடலா லினியமாலொப்போன்,பலகலைவ
டிவிற் - பாரதிநாவிற்,குலவலினன்மறைக் - கோவினையனையான்
அருணாசலப்பெயரார்ந்த - கருணாசலமெனக்கவினுமன்னவனே

இ ௦ம் து.

சாரம் - குமரப்பமுதலியாராற்செய்யப்பட்டது.

கவரத்தூர்.

இலக்கணம் - குமாரசுவாமிதேசிகர்குமாரர்

## சுப்பராயதேசிகர்பாடியது.

(பதினான்குசீர்க்கழிநெடிலடி - ஆசிரியவிருத்தம்.)

தணப்புறுப் பிறவிப் பிணிகெட மருந்து - தக்கவாயபற்ப கனுடித், தரணியி னிறைவே தாந்தமாக் கடலிற் றத்துவராயர் சாஸ்த்திரமா, முணப்பெருவமிர்தைக் கடைந்தெடுத் தெவரு முண்ணியவச்செழுத்தென்று - மொண்மணிக்கலத்தின் மாதவ னமரர்க்குதவியாங்குதவினன் கொன்றை, யெணப்பெருப்பு கழ்சேர் முருகப்பமன்ன - னிருந்தவத்தளித்தவ னுலகி, லிருவ கைப்பொருளிற் பாண்டியன்பண்டை - யிந்தநாளிவனெனச் சிறந்தான், அணப்பெருப் பெருக்கின் வணக்கம் வேண்டிடு மென் - றறைமுதுமொழிக்கொரு சான்று, யமருநல்லருணாச லனெனப்பெயர்கொண் டகிலமேல்வரு - புரந்தரனே. - ※

---

ஸ்ரீ முதலியாரவர்கள் சமூகவித்துவானாகிய

சிதம்பரம்

## பழனிஉபாத்தியாயர்பாடியது.

(நேரிசைவெண்பா.)

கொன்றையரு ணாசலப்பேர்க் கொண்ட வுலகவர்க - ※
டுன்றுபவ வெப்பைத் துரப்பதற்குண் - - டின்றுபெயத்
தத்துவ ராயர் சகராரிற்காண் சாஸ்த்திரமாம் - - ※
அத்தியிடை வாய்வைத்த தால். - - - ※

இதுவுமவர்.

(கட்டளைக்கலித்துறை,)

பைம்மாறுதத்துவராயர்சொன் னூலைப்பதித்தச்சினின் - ※
மைம்மாறில்சன்மப்பகைவெருண்டோடமலிவித்துமெம் ※
பொய்ம்மாறுபேரின்பவாரிதிளைக்கப்புரிந்திடலால் - ※
கைம்மாறென்செய்வதருணாசலர்க்குக்கடலுலகே. - ※

வருத்தமுழுதும் நீங்கிநடக்கச்சக்தியும்பெற்றுக்கொண்டு(ஸ்வா)
மிகளால், அனுப்பப்பட்ட மாணாக்கர்களைப் பார்த்துக்
குருநிதியாகிய ஸ்வாமிகள் மஹா அபராதியாகியவென்னையும்
க் கட்டளையிட்டதோ வென்று பேரானந்தமடைந்து மேற
டிப்பிரபந்தத்தில் திருவருட்சுழன்மாலை - போற்றிமாலை - புக
ச்சிமாலை முதலான வைகளையும் பாடிக்கொண்டு சிரசின்மே
அஞ்சலியஸ்தராய் ஸ்வாமிகளுடைய சந்நிதானத்தைப் பார்
த்துக்கொண்டேவந்து பிரதக்ஷிணம் பண்ணி அஷ்டாங்க ப
சாங்கமாக அநேகநமஸ்காரஞ்செய்து முன்னிலும் அதிகமா
க் கண்களில்நீர்பெருக மயிர்க்குச்செறிந்து பரவசப்பட்டு ெ
ஞ்சமுருகி ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு நிற்கும்போது
ஸ்வாமிகளும் இருவென்றுகட்டளையிட இருந்து ஸ்வாமிகளின்
பணிவிடை செய்துகொண்டுமிகவும் ஸந்தோஷமடைந்திருக்கு
நாளில் ஸ்வாமிகள் தத்வராயர் பாடிய சாஸ்திரங்களை யெல்லாம்
பார்வையிட்டுச் சொல்லமைதியும் பொருளமைதியுநோக்கிச்சந்
தோஷத்தைத் தனக்குள்ளே யடக்கிக் கொண்டு இந்தச் சாஸ்தி
ரங்கள் மிகக்கற்றவர்க்கன்றி மற்றவர்க்குதவாதென்று நினைத்து
த்தத்வராயஸ்வாமிகளைப்பார்த்து அப்பா இந்தச் சாஸ்த்ரங்களெ
ல்லாம் உனக்கே பாடிக்கொண்டனை யன்றி யுலகத்தாருக் குப
யோகமாகப் பாடவில்லையே என்றருளிச்செய்ய அப்போது
மடைத்தொழிலாளர்கள் ஸ்வாமீ அமுதுகொள்ள வெழுந்தருள
வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய ஸ்வாமிகளும் நித்யக
ர்மங்களை முடித்து அமுதுக்கெழுந்தருளத்தனியேயிருந்ததத்
வராயஸ்வாமிகள் ஆசாரியர்திருவாக்கை ஆலோசித்து அப்படி
யே தாமும் நினைத்துஸ்வாமிகள் அமுதுகொண்டு வருமுன்னர்
எல்லா க்கும்பிரயோசனப்பட மோகவதைப்பரணியில் ஒருபி
ரகரணமாகச் சசிவர்ணபோதமென்னும் ஒருசாஸ்த்ரத்தைச்செ
வாமிகள் திருவடியிலேவைத்துநமஸ்காரம்பண்ணஸ்வா
மிகளும் தத்வராயர் விரைந்துபாடினதையும் அச்சாஸ்த்ரத்தின்
பாகத்தையும் பார்த்துச் சந்தோஷமடைந்தார். பின்னும்தத்வ
ராயஸ்வாமிகள் சில வேதாந்த சாஸ்த்ரங்களுஞ் சிலமதவிசித்தாந்

ால்களுஞ் செய்துகொண்டு நிர்விகற்ப சமாதியி லிருக்குநா
யாத்திரைசெய்கின்றவராகியசில ஆசாத்தியர்களுஞ் சிலவித்
ள்களும்ஸ்வரூபானந்தஸ்வாமிகளின்சந்நிதானத்தில் வீற்றிரு
கிற தத்வராயஸ்வாமிகளின்முன்னேவந்துபோர்முகத்தாயிரங்
களிற்றி யானையைக்கொன்ற சுத்தவீரனைத் தலைவனாகக்கொண்டு
பாடப்பட்டபரணியென்னும்பிரபந்தத்தைவீரமென்பதுகனவி
லுங்கேட்டறியாத உம்முடைய ஆசான்மேலெப்படிநீர்பாடினீ
ரென்றுகேட்க அதற்குத்தத்வராயஸ்வாமிகள்நம்முடையஸ்வாமி
களும்சிஷ்யருடையஅகங்காரமாகியயானையைகொல்லுதலாற்பா
டினேமென்றுசொல்ல அதற்குஅவர்கள்நீர்சொல்லும்அகங்கார
யானைகண்ணுக்குப் புலப்படாமையால் ஒவ்வாதுஆயினும்ஒருசி
ஷ்யனுடையஅகங்காரமாகியயானையைக்கெடுத்தற்கு அநேகநா
ட்செல்லுமே இவர் ஏககாலத்தில் ஆயிரஞ்சிஷ்யர்கள்அகங்காரத்
தைக் கெடுத்த தெப்படியென்றுவினவஅதற்குத்தத்வராயஸ்வா
மிகள் அனுபவத்திற் காட்ட வேண்டுமென்று பிரதியுத்தரமொ
ன்றுஞ்சொல்லாமல் சமாதிசெய்திருந்தார் ஸ்வரூபானந்தஸ்வா
மிகளின்சந்நிதானப்பட்டமையால் வந்தவித்வான்களனைவரும்
இராப்பகல்ஒன்றுந்தெரியாமல் மூன்றுதினமளவும் பரிபூரணநி
ஷ்டையிலிருந்தார்கள். நாலாநாள்தத்வராயஸ்வாமிகள் திருக்கண்வி
ழித்தபின்பு அவ்வித்வான்களும் எழுந்துஸ்வாமிகளையும் தத்வ
ராயஸ்வாமிகளையும் நமஸ்காரம்பண்ணிநாங்க ளறியாமையினா
ல் ஆக்ஷேபித்தோம் தங்கள் சந்நிதானத்தினது விசேஷம் ஏக
காலத்தில் பதினாயிரஞ்சிஷ்யர்கள்நேரிட்டாலும்பரிபாகப்படுத்
தத்தக்க வல்லபமுள்ளதென்று அவர்கள் பலரும் இப்பிரபந்த
ங்களைக்குறித் துஒவ்வொருகவிகளைச்சாத்திமாணாக்கர்களாய்வழி
பட்டுப்போயினார்கள்.பின்புதத்வராயஸ்வாமிகள் லோகோபகா
ரமாகவேதாந்தசாஸ்த்ரத்திற்குள்ளே ஸ்வானுபூதிக்கிசைந்துஸா
ரமாயுள்ள செய்யுட்களை யெல்லாந்திரட்டிப் பெருந்திரட்டுகு
றுந்திரட்டென்னஇரண்டுசாஸ்த்ரத்தை அருளிச்செய்தார் இப்
படியாக ஸ்வாமிகளுடனிணைபிரியாமல்இருக்கும்பொழுதுஸ்வ
ரூபானந்தஸ்வாமிகள்யாதோ ஒருதிருவிளையாட்டைநினைத்துத்

தத்வராயஸ்வாமிகளைவைத்துத் தாம்பிரிந்துபுறப்பட்டுப் போ
கையில்இவரும்பின்றொடராஸ்வாமிகளுந்தமக்குநேரிட்டபடிவ
ழியொன்றின்றி காடுநாடுமலைகள்முதலானவிடங்களிற்சுற்றித்தி
ரிந்துசமுத்திரத்தின் சமீபத்திற்போயினார்தத்வராயஸ்வாமிகளு
முடனாகவேபோய்ஸ்வரூபானந்தஸ்வாமிகள்கடன்மேல்நடக்க
க்கடற்சலம்விலகிவழிகொடுக்கஅதைக்கண்டுதாமும்கடலில்நட
க்கஜலம்வழிவிடாமையால்கரையிலேநின்றுபசுவைநீங்கிய விள
ங்கன்றுபோலக்கதறித்திக்குகள்தோறுந்தேடும்பொழுதுஸ்வரூ
பானந்தஸ்வாமிகளுந்தரிசனங்கொடுத்துப்பின்புஅகண்டபரிபூ
ரணசச்சிதானந்தமாய்விளங்கினார், அதைக்கண்டதத்வராயஸ்வா
மிகள் அதிசயமும்ஆராமையும் அடைந்துஸ்வாமிகளுக்குச் செ
ய்யவேண்டியஉத்தரகிரிகைகளெல்லாமுடித்துஸ்வாமிகளையேநி
னைத்துக் கொண்டிருந்து பிரிவாற்றாமையாலோ பேரன்பினா
லோ ஸ்வாமிகளையன்றித்தனக்கொருசெயலின்மையினாலோ தா
மும் உடனே பரிபூரண ஊசையடைந்தார். இவர்களுக்குத்திரு
வலஞ்சுழியும்வாசஸ்தானம்சிவப்ரகாசஸ்வாமிகள்ஸமாதி திருவா
ரூர்சமீபஸ்தானம்.ஸ்வரூபானந்தஸ்வாமிகள் ஸமாதி திருவண்ணா
மலைக்கும் விருத்தாசலத்துக்கு மத்திஸ்தானம். தத்வராயஸ்வாமி
கள்ஸமாதிசிதம்பரத்துக்கும்விருத்தாசலத்துக்குமத்திஸ்தானம்
இந்தச்சரித்திரம் மேற்படிஸ்வாமிகளுடைய பரம்பரை மாணா
க்கர்கள்அனுப்பினபிரதிகளின்படிபதிப்பிக்கப்பட்டது.

இந்தச் சரித்திரம் வரும் பிரதிகளில், விரிவாகத்தெரி
விக்கப்படும்.

---

சிவப்ரகாசஸ்வாமிகள்

# திருவடிகளே சரணம்,



கணபதிதுணை.

# மூன்றாவது.

# தத்வாமிர்தக்கட்டளை.

# அத்வைதசுத்தவேதாந்ததரிசனம்.

(கலிநிலைத்துறை.)

அண்ணல்கூறிடுமெரியவாரணக்கடலெழுமவி.......... ❊
வண்ணமின்றியவாசாமகோசரவமிர்தைக்.......... ❊
கண்ணதாயிடக்கரதலமணியெனக்காட்டும்.......... ❊
வண்ணமுள்ளமாவாக்கியமைந்தற்குப்புகல்வான்.......... (௧)

வன்னநாலதாய்வண்பதமூன்றஃதுடைத்தாய்த்.......... ❊
தன்னதாம்வடிவதுமிகத்தானுநுண்ணியதாய்.......... ❊
முன்னமாமறைமுழுதமோதியுமுடியாச்சீர்.......... ❊
மன்னுமாப்பொரு(❊ளுடைமை)மாவாக்கியப்பெயராய்.. (௨)

வடிவுநுண்மையுமாப்பொருளுடைமையுமலர்வு.......... ❊
முடிவுமாயிருமையுமறமொழிதருவிரகும்.......... ❊
படியிலாதெழுபழமையுமப்படிபுதுமை.......... ❊
யுடையவாகியவுயர்குறியாறவையுடைத்தாய்.......... (௩)

இறந்தகேள்வியாயிறந்தநற்றரிசனமஃதா.......... ❊
யிறந்தவீரமாயெலயிலானந்தஞானமதாய்ச்.......... ❊
சிறந்தகாலதேசந்திசையிறந்திடத்திகழ்ந்து.......... ❊
நிறைந்தவெட்டியல்புடைத்துநீள்வாக்கியமினங்கேள்.......... (௪)

---

(❊ உடைமையின்என்பது-உடைமையென, வேற்றுமைத் தொகையாயிற்று.)

(கலிவிருத்தம்.)

நித்தமொடுமுந்தநிமலந்திகழ்பரத்தை.......... ............... *
புய்த்தகரமுத்தமணியத்தினிகரொப்ப.... ........................ *
மெய்த்திடவெவர்க்குமுணரத்திகழுவிக்குந்....... ............... *
தத்வமஸிதத்வமஸிதத்வமஸிஸத்யம்.............................(௫)

---

# இனிவசனம்.

---

ஆதலால் - மஹாவாக்யஞ் சொல்லப்பட்ட ஞானமே ஞானம், அதையல்லாமற்சொல்லப்பட்ட ஞானங்களெல்லாம், அறியுமிடத்துக்குஞ்ஞானமேயாம் (ஆன)படியினாலேசுத்தவேதாந்தஞ் சொல்லப்பட்ட பரிசினை ஆசாரியர்சிஷ்யனுக்கு - அனுக்கிரகம்பண்ணுகிறார். *

அதெப்படியென்னில், இருக்கு- யஜுஸ், ஸாமம், அதர்வணம் - என்கிறநான்குவேதங்களும், இரண்டு பிரகாரமாயிருக்கும். அவையெவையென்னில், அல்பசுருதிவாக்யமென்றும் பிரபலசுருதிவாக்யமென்றுமாம் - இவற்றில், அல்பசுருதிவாக்யம் - கர்மகாண்டத்தைச்சொல்லும். பிரபலசுருதிவாக்யம், அத்யாத்மத்தைச்சொல்லும். இது, முப்பத்திரண்டுஉபநிஷத்தாயிருக்கும். இது - நான்கு வாக்யங்களைப்பிரதிபாதிக்கும், அவையெவையென்னில், பிரஜ்ஞானம்பிர்ம, அகம்பிர்மாஸ்மி - தத்வமஸி - அயமாத்மாபிர்ம - என்பனவாம், இந்த நான்குவாக்யமும் ஜீவபரஐக்கியத்தைச்சொல்லும் இந்தநான்குவாக்யத்திலும், தத்வமஸிவாக்யம், மஹாவாக்யமென்றுசொல்லப்படும். அதெப்படியென்னில் நான்குவாக்யத்தினர்த்தமும் இந்தவாக்யத்திலிருக்கையினாலும் அத்வயபதம் இதினிடத்தேயிருக்கையினாலும். அவாங்மனோகோசரமாயிருக்கிறவஸ்துவை கரதலாமலகம்போலக்காட்டுகையினாலும் - இது, மஹா வாக்யமென்றுசொல்லப்பட்டது. இந்த, மஹாவாக்யந்தான், அவாங்மனோகோசரமாயிருக்கிற வஸ்துவை, நான்குவர்ணமும், மூன்றுபதமும்,

---

ஞானம்-ஞானமாத்ரத, ()ஆயினவென்பது-ஆனவெனவழங்கியது,)

மூன்று லக்ஷணத்தாலுஞ்சொல்லிற்று. ஆறுகுறியும், எட்டிய
ல்புமாயிருக்குமென்று சொல்லிற்று.அவைகள்யேவையென்னி
ல்,தான்குவர்ணமாவன,தத்-துவம்,அ,ஸி.இவைகளாம்.மூன்று
பதமாவன-தத்பதம்,துவம்பதம்,அஸிபதம்.இவைகளாம்.,மூ
ன்றுலக்ஷணமாவன,ஜீவ,பர,ஐக்கியம்,இவைகளாம்.ஆறுகுறியா
வன,வடிவு நன்மை-மாப்பொருளுடைமை-நிறைவு, இரண்ட
றவிளங்கிபமுடிவு, என்றும்பழமை, என்றும்புதுமை, இவைக
ளாம்,எட்டியல்பாவனகேள்வியிறந்ததாதல்,தரிசனமிறந்ததாத
ல்வீரமிறந்ததாதல்,எல்லையிலாதவானந்தமுடையதாதல்எல்லையி
லாதஞானமுடையதாதல்-காலமிறந்ததாதல்-தேசமிறந்ததாத
ல்,திசையிறந்ததாதல்.இவைகளாம்,இப்படிமஹாவாக்யத்தாற்
சொல்லப்பட்டவஸ்து, எப்படிவிளங்குமென்னில் ஆசாரியர்தி
ருவருளினாலே சொல்லுகிற-சிரவணம்,மனனம், நிதித்யாஸன
ம், என்னுமூன்றுவகையினாலேவிளங்கும். இந்தமூன்றுவகையு
ம் விசாரிக்குமிடத்துஸ்தூலசிரவணாதிமூன்றென்றும்-ஸூக்ஷ
மசிரவணாதி மூன்றென்றும், இரண்டுவிதமாயிருக்கும்.

ஸ்தூலசிரவணாதி,

இவற்றில், ஸ்தூலசிரவணாதிமூன்றுவன, சொல்லப்பட்ட
சாஸ்திரங்களைஇதுவிதுவென்று வினவிப்பகுத்தறிந்துகேள்விப்
படுகிறதுசிரவணம்.அப்படிகேள்விப்படாநின்ற சப்தார்த்தங்
களெல்லா மனதிலேதரிக்கத்தெளிந்துவிளங்குகிறது மனனம்.
சிரவணத்தினாலேகேள்விப்பட்டுமனனத்திலேதெளிந்து விளங்
கியிருக்கப்பட்ட யாதொருஅறிவுண்டு,அந்தஅறிவுதானுப்நிற்
கப்பட்டநிலைநிதித்யாஸனம்.

ஸூக்ஷமசிரவணாதி,

இனிஸூக்ஷமசிரவணாதிமூன்றென்றதெப்படியென்னில்சிரவ
ணமாவதுமஹாவாக்யஞ்சொல்லப்பட்டஅதுவெனும்தத்பதத்
துக்கர்த்தம்,பரம்,நீயென்னுந்,துவம்பதத்துக்கர்த்தம்,ஜீவன்
ஆனுயென்னும், அஸிபதத்துக்கர்த்தம், இரண்டினுடைய ஐ
க்கியமாயற்றபொருள்,கிரியாபதத்துடனேகூட்டிப்,போதிக்கி

றமுறைமை எப்படியென்னில், அது, நீயாகின்றாயென்றும் நீய
துவாகின்றாயென்றும்போதிக்கப்படுதலாம். இந்தவாக்யம் அந்
வயித்துப் போதிப்பானேனென்னில் அதுவென்கின்றதத்பதத்
துக்கு உபாதி, பரோக்ஷமென்கின்ற காரணஉபாதி நீயென்கின்ற
துவம்பதத்துக்கு உபாதி அபரோக்ஷமென்கின்ற காரியஉபாதி
இந்தஅபரோக்ஷமென்கின்றகாரியஉபாதிமுந்திவருகையினாலே
துவந்ததஸியென்றுபோதிக்கவேண்டிற்று. துவந்ததஸிவாக்ய
ம்போதிக்கிறமுறைமைஜக, சீவ, பரத்தைவிலக்கும், அதெப்படி
யென்னில் நீயென்கின்றதுவம்பதத்துக்குஉபாதியேழு. அதெ
ன்கின்றதத்பதத்துக்கு உபாதியேழு. இந்தஉபாதியேழுமுக்யம்.
இந்தஉபாதியேழுந்தீர்ந்ததுலக்ஷியம். உபாதியைநானென்றது
அசுத்தம். உபாதியைநீங்கினதுசுத்தம். இந்தஇரண்டுபதங்களு
க்கும்லக்ஷியமான சுத்தார்த்தங்களை ஆனாயென்னும் அஸிபதத்
திலே ஏகமாய்க்கண்டு விளங்குகிறதேசிரவணம். மனனமாவது
துவம்பதத்திற்காரியஉபாதியேழும், அவஸ்தைமூன்றும். தத்பத
த்திற்காரணஉபாதியேழும் - அவஸ்தைமூன்றும் தரிசித்து நீக்கி
ஜீவனும் பரனும் அஸிபதத்திலேஐக்கியப்படக்கண்டுஏகமான
பொருளைமனதிலே தரித்திருக்க விளங்குகிறது மனனம். நிதித்
யாஸனமாவது, துவம்பத, முக்யமான அவஸ்தை, மூன்றையும்
நீங்கி லக்ஷியமாய் விளங்குகிற ஜீவனுந் - தத்பத முக்யமான
அவஸ்தைமூன்றையும்நீங்கிச் சுத்தமாய்விளங்குகிற- பரனும்-
அஸிபதத்திலே - ஐக்கியப்படக்கண்டு - ஏகமாய் விளங்குகிற
ஸ்வரூபத்தை, ஆசாரியருடைய திருவருளினாலே சிரவணத்தினா
லே கேள்விப்பட்டு மனனத்தினாலேதரித்துவிளங்குகிற, தத்ஸ்வ
ரூபத்தானாய் நிற்கப்பட்டநிலைநிதித்யாஸனம்.

## துவம்பதமுக்யசீவவுபாதி.

இப்பால், முன்சொல்லப்பட்ட ஸூக்ஷ்மசிரவணாதிஎன்றமூன்
றையும்விரித்துவிளங்கவருளிச்செய்கிறார். அவையெப்படியெ

ன்னில்- சிரவணமாவது, துவம்பதமுக்ய சீவ உபாதிசொல்லுகிறோம். அதெப்படியென்னில், வேதாந்த தத்வமாவன,(௨௮) அவையெவையென்னில், ஞானேந்திரியமானஸ்ரோத்ராதி-௫. இவற்றின், விஷயமானசப்தாதி, ௫. கன்மேந்திரியமானவாக்காதி-௫ இவற்றின்,விஷயமானவசனாதி-௫.அந்தக்கரணம்,௪.புருஷன்,காலபரம், வியோமம் ,பரம் - ௪ - ஆக தத்வம்-௨௮. இவற்றில்,புருஷன்,காலபரம்,வியோமம், பரம், இவைநான்கும் நிற்க நின்றதத்வம்-௨௪. பிராணவாயு-௧-ஆக-தத்வம்-௨௫. இவை,எழுஉபாதியாம்.அவையெவையென்னில். தேகம் - இந்திரியம்- மனம்- புத்தி-அஹங்காரம் - சித்தம் - பிராணன் - ஆக-௭. இவற்றில், தேகம்நானேயென்னில், தேகம் நீயன்று, அதெப்படி நானன்றென்னில்- என்னுடைய தேகமென்றுன்னாலறியப்படுகையினாலும் தேகம் பஞ்சபூதத்தின் கூறுகையாலும் தேகமுனக் கந்நியமாகையினால்தேகம் நீயன்று. இந்திரியம் நானேயென்னில் இந்திரியமும் நீயன்று. அதெப்படி நானன்றென்னில் என்கண் நன்றாய் விளங்குகிற தென்றும் என்கண் நன்றாய்விளங்குகிறதில்லையென்றும் என்காது நன்றாய்க்கேட்கிறதென்றும் என்காது நன்றாய்க் கேட்கிறதில்லை யென்றுஞ்சொல்லப்படுகையினாலும். இந்திரியமொன்றறிந்த தொன்றறியாதபடியினாலும் -என்னுடைய இந்திரியமென்றுன்னாலறியப்படுகையினாலும், இந்திரியம்பஞ்சபூதத்தின்கூறுகையினாலும், இந்திரியம்,உனக் கந்நியமாகையினால்இந்திரியமும், நீயன்று. அந்தக்கரணங்களில்- மனந்தான் நானேயென்னில், மனமும் நீயன்று. அதெப்படி நானன்றென்னில் என்னுடைய மனமென்றுன்னாலறியப்படுகையினாலும், மனம்வாயுவின் கூறுகையினாலும்,மனமும் நீயன்று.புத்திதான் நானேயென்னில்,புத்தியும் நீயன்று:அதெப்படி நானன்றென்னில்,என்னுடையபுத்தியென் றுன்னாலறியப்படுகையினாலும் புத்தி அக்நியின் கூறுகையினாலும் புத்தியும் நீயன்று. அஹங்காரந்தான் நானேயென்னில்

அஹங்காரமும் நீயன்று. அதெப்படி நானன்றென்னில். என்னு டைய அஹங்காரமென் றுன்னாலறியப்படுகையினாலும் அஹங் காரம்பிருதிவியின்கூறுகையாலும் அஹங்காரமும் நீயன்று. சித் தந்தான் நானேவென்னில் சித்தமும் நீயன்று. அதெப்படி நான ன்றென்னில், என்னுடையசித்தமென்றுன்னாலறியப்படுகையி னாலும்சித்தம்அப்புவின் கூறுகையாலும்சித்தமும் நீயன்று. அ ந்தக்கரணந்தான் நானேவென்னில், அந்தக்கரணமும் நீயன்று. அதெப்படி நானன்றென்னில், ஸங்கல்ப நிச்சயவபிமானசிந்தனை இத்யாதி வடிவாகையால் அந்தக்கரணமும் நீயன்று. பிராணன் நானேவென்னில். பிராணனும் நீயன்று. அதெப்படி நானன் றென்னில் என்னுடையபிராணனென் றுன்னாலறியப்படுகை யினாலும் பிராணன்பிருதிவியின்கூறுகையினாலும் ஸுஷுப்தி யிற்சைதன்னியமில்லாமையினாலும்பிராணனும் நீயன்று. இவை யெல்லாம்நானன்றாகில் - நான்யாரோவென்னில் தசமதிருஷ்டா ந்தமிட்டனுக்கிரகம்பண்ணுகிறார். ※

அதெப்படி யென்னில் பத்துப்பேர்கூடிஒருஊர்வழிப் போகையில் ஆற்றிலேஅமிழ்ந்திக்கரையேறியெண்ணிப் பார்க் கும்போது ஒன்பது பேரை யெண்ணித்தன்னை யெண்ணாமல் ஒருவனைக்காணோமென்றுமயங்குமிடத்தில்அந்நியனாகிய வொ ருபுருஷன்வந்துபத்தாவானைக்காட்டிக்கொடுத்தாற்போல ஆ சாரியரொழுந்தருளி இந்த ஏழுபாதிபுங்கண்டுகொண்டிருக்கிற யாதொருசைதன்னியஅறிவுண்டு அந்தச்சைதன்னிய வறிவுதா ன்காண், நீயென்றநுக்கிரகம்பண்ணினார். இந்தச்சைதன்னிய வறிவு காரியவுபாதியுடனே கூடிநின்றபோது முக்யமென்று ம். உபாதியைவிட்டு நீங்கினபோது லக்ஷ்யமென்றும். உபாதி யைநானென்றபோது அசுத்தமென்றும். உபாதியை நீங்கின போது சுத்தமென்றுஞ் சொல்லப்பட்டது. இதுக்கு, சம்ஸர் க்கவாக்யம். (அவையெவையென்னில் (மஞ்சாக்குரோசந்தி-கெ ங்காயாங்வோஷிப்பிரதிவஸதி.) என்பன. மஞ்சங்கூப்பிட்டதெ

ன்றும், கெங்கைக்கண்ணிடைச்சேரியுள்ளதென்றுஞ் சொல்லு மிடத்துமஞ்சமானது, மரம் மரமானதுகூப்பிடுமோ, மஞ்சத்தில் ஒருபுருஷனிருந்துகூப்பிட்டானென்று கொள்ளவேண்டிற்று. கெங்கையானது, ஜலம் ஜலத்திலே இடைச்சேரியிருக்கமாட்டாது கெங்கைக்கரையிலே இடைச்சேரி யிருக்கின்றதென்று கொள்ள வேண்டிற்று. இப்படிபோலஏழுஉபாதிக்குஞ் ஜீவன் சாக்ஷியாயிருக்கின்றானென்று கண்டுகொள்க. இதுவிட்டலக்ஷணை.—துவம்பதமுக்யசீவஉபாதி முற்றிற்று.

## தத்பதமுக்யபரவுபாதி.

தத்பதமுக்யபரஉபாதிசொல்லுகிறோம். அதெப்படியென்னில், துவம்பத லக்ஷியார்த்தமான துரியம் பரனுக்கு உடலாகையாலே இதனிடத்திலே ஸர்வஜ்ஞத்வாதி உபாதியுண்டாயிற்று. அவையெவையென்னில், ஸர்வஜ்ஞன் - ஸர்வகாரணன் - ஸர்வாந்திரியாமி - ஸர்வேஸ்வரன் - ஸர்வசிருஷ்டி - ஸர்வஸ்திதி - ஸர்வஸம்ஹாரன் என்பனவாம், அவற்றுள், ஸர்வஜ்ஞனென்பானேனென்னில் இந்திரியங்களெல்லாம் ஒன்றறிந்தொன்றறியாத படியினாலும்தான்ஸர்வத்தையும்அறிகையினாலும்ஸர்வஜ்ஞனென்கிறநாமமுண்டாயிற்று ஸர்வகாரணனென்பானேனென்னில்இந்திரியங்களெல்லாமழிந்துந் தானழியாமல்நிற்கையினாலே-ஸர்வகாரணனென்கிற நாமமுண்டாயிற்று. ஸர்வாந்திரியாமி யென்பானேனென்னில், இந்திரியங்களுக்கெல்லா முள்ளீடாய்நின்றறிகையினாலே ஸர்வாந்திரியாமியென்கிறநாமமுண்டாயிற்று. ஸர்வேஸ்வரனென்பானேனென்னில்,இந்திரியங்களுக்கெல்லா மேலாய்நின்று விளங்குகையினாலே ஸர்வேஸ்வரனென்கிற நாமமுண்டாயிற்று. ஸர்வசிருஷ்டியென்பானேனென்னில், இந்திரியங்களெல்லாந் தன்னுக்குள்ளே தோன்றுகையினாலே, ஸர்வசிருஷ்டியென்கிற நாமமுண்டாயிற்று. ஸர்வஸ்திதியென்பானேனென்னில், இந்திரியங்களையெல்லாந் தானே ரக்ஷிக்கையினாலே ஸர்

வஸ்திரியென்கிற நாம முண்டாயிற்று. ஸர்வஸம்ஹார னெ ன்பானேனென்னில்இத்திரியங்களெல்லாந்தன்னுக்குள்ளேயட ங்குகையினாலே ஸர்வஸம்ஹாரனென்கிற நாமமுண்டாயிற்று இந்த,எழுஉபாதியும்ஸ்வரூபமன்று. இனி, எதுதான் ஸ்வரூப மென்னில் இந்த,எழு உபாதிகளையும் யாதொரு சைதந்நியத்தி னாலேயறவிடப்பட்டதோ,அதுவே-ஸ்வரூபம். இந்த, ஸ்வரூ பம் உபாதியுடனே ஸம்பந்தித்து நின்றபோது,முக்யமென்று ம், உபாதியைப்பிரிந்தபோது-லக்ஷ்யமென்றும், உபாதியை நானென்றபோது அசுத்தமென்றும், உபாதிக்குச் சாக்ஷியான போது சுத்தமென்றுஞ்சொல்லப்பட்டது. இதற்கு விசிஷ்ட வாக்யம்-அவையெவையென்னில்,சோணஸ்திஷ்டதி-சுவேதோ யாவதிஎன்பன, ஒருசிவப்புக்குதிரையும் வெள்ளைப்பசுவையுங் கண்டாயோவென்பார்க்குச் சிவப்புநிற்கின்றது,வெள்ளைபோ கின்றதென்னுமிடத்துச் சிவப்பானவர்ணந் தனியேநில்லாது. வெள்ளையானவர்ணந்தனியேபோகாது. ஆகையால் சிவப்பையு டையகுதிரை நிற்கின்றதென்றும் - வெள்ளையையுடைய பசு போகின்றதென்றும்,கொள்ளவேண்டின. இப்படிபோலஸர்வ ஜ்ஞத்வாதிஉபாதியுடையவனாய்அதற்குச்சாக்ஷியாயிருக்கின்றான் பரன்.இது, விடாதலக்ஷணை.தத்பதமுக்யபரஉபாதிமுற்றிற்று.

---

## அஸிபதம்.

இனி, அஸிபதம் அநுக்கிரகம்பண்ண வேண்டு மென்ற போது முன்சொல்லப்பட்ட விரண்டுபதத்தினுடைய உபா தியுந்தீர்ந்து லக்ஷ்யார்த்தமான பதார்த்தத்தை அஸிபதத்திலே ஐக்கியம் பண்ணவேண்டுமென்ன, ஆசாரியனைநோக்கிச்- சிஷ் யன் விண்ணப்பஞ்செய்கிறான்.-தேகக்கிரகனாகிற கிஞ்சித்ஜ்ஞனா யிருக்கிற சீவனுக்கும் போதகிரகனாகிற சர்வஜ்ஞனாயிருக்கிற- பரனுக்கும், எப்படி, ஐக்கியங்கூடுமென்ன கூடுங் காண்- இரண்டுபதத்திலுஞ்சொல்லப்பட்டபொருள்- முன்னையிக்கிய

விருப்பினாலேயேகமாம். அதெப்படியென்னில், ஸம்ஸர்க்கவாக்யமும் - விசிஷ்டவாக்யமும் - சொல்லப்பட்ட முக்யமானஉபாதி தீர்ந்து லக்ஷ்யமானேமென்கிற வாலினாதோஷமாகிய குற்றம் அகண்டவாக்யத்தினாலே ஏகம்பண்ணப்படும். அகண்டவாக்யமாவது, ஸோயந்தேவதத்தனென்றது. ஒருதேவதத்தனாகியபுருஷனுடனேநாம்சிறிதுநாள்கூடவிருந்தோம் இவன்சிறிதுநாளுக்குப்பிறகுபிரிந்துபோயினான். அநேகநாளுக்குப்பின்பு சதுரங்கபரிகரத்துடனேயிவனைமதுரையிலேஅந்திக்காலத்திலே ராஜாவாயிருக்கக்கண்டோம் அங்கேஅவனுடன் சிறிதுநாள்கூடியிருந்தோம். பின்புநம்மை அவன்பிரிந்துபோயினான். சிறிதுநாளுக்குப்பின்புதண்டகமண்டலத்துடனே அவனைச்சிதம்பரத்திலேவிடியற்காலத்திலேசந்நியாசியாயிருக்கக்கண்டோம் அப்பொழுது இவன் அந்ததேவதத்தனோ அல்லனோவென்றுசந்தேகிக்கையில் இவனடியிலும் - மார்பிலும் - முடியிலும் முன்னேமறுவுண்டே அந்த அடையாளம் இவனிடத்திலேயிருந்தால் அந்தத் தேவதத்தனே இவனாவனென்றுபார்க்குமிடத்து அந்த அடையாளம் இவனிடத்திலே இருக்கையால் அந்தத்தேவதத்தனேயிந்தத்தேவதத்தன் ஆவானென்றுசொல்லப்பட்டது அப்போதுஅவனைவிட்டன அந்த, இரண்டிடமும் இரண்டுகாலமும், அவை விட்டுப்போக, விடாமல்நின்றவன் ஒருதேவதத்தன்மாத்திரமே, அவனைப்போல இந்தத், துவம்பதமாகிய, ஜீவஉபாதிக்கும், தத்பதமாகிய, பரஉபாதிக்கும். சாக்ஷியாய்நின்றவன்ஒருவனே. இந்த ஒருவனுக்கும்விட்டுப்போயின துவம்பதஉபாதியென்னும் காரியஉபாதியும்தத்பதஉபாதியென்னும் காரணஉபாதியும் அவை விட்டுப்போக, விடாமல்நின்றவன்ஒருவன்இப்படிஇரண்டு உபாதியும்போக இரண்டுபதத்திலும்நின்றசீவனேபரனென்றும்பரனேசீவனென்றும் ஏகமாய்க்காண்பது அஸிபதம்இதுவிட்டுவிடாதலக்ஷணை அஸிபதமுற்றிற்று.

வாதமற்றிருக்கப்பட்ட-வஸ்துவை, மன்னுமஹாவாக்யத்தினாலே, தத்பதார்த்தசோதனைபண்ணப்பட்டது. அதனாலேபோத

மே யுனையற் றோங்கும்பொருளெனத்தெளிந்தேன், அல்லதீர்பொருளீதென்பதறிந்துகொண்டேன். தேவரீரநுக்கிரகத்தினுலே சிரவணத்திடமாயிற்று—இனி, மனனமருளிச்செய்ய வேண்டுமென்ன அருளிச்செய்கிறார்.—சிரவணமுற்றிற்று.

---

## மனனம்.

### துவம்பதார்த்தம்.

அஃதாவது, சொல்லப்பட்ட பதமூன்றில் முன் துவம்பதார்த்தஞ்சொல்லுகிறோம். துவம்பதமுக்யத்தைமனனஞ்செய்நீ. அதெப்படியென்னில் தேகம், இந்திரியம், மனம், புத்தி, அஹங்காரய்சித்தம், பிராணன், இந்தத்துவம்பதமுக்யமானவெழுபாதியும் மூன்றவஸ்தைகளாம். அவையெவையென்னில் ஜாக்ரம் - ஸ்வப்னம் - ஸுஷுப்தி - இவைக்கு - அபிமானிகள்விஶ்வன் - தைசதன் - பிராஜ்ஞன் - இந்த மூன்றவஸ்தையும் - மூன்றபிமானியும் - சீவனுடையமுக்யம். ஆதலால் ஏழுபாதியுடனேகூடிவிளங்குகிறது - ஜாக்ரம். அபிமானிவிஶ்வன் - தேகம் இந்திரியம் இவையிரண்டுநிற்க - மனம் - புத்தி - சித்தம் - அஹங்காரம், பிராணன், இந்த ஐந்துடனேகூடிவிளங்குகிறது ஸ்வப்னம். அபிமானி, தைசதன். அந்தக்கரணம் - நான்கும்நிற்க பிராணவாயுவுடனேகூடி விளங்குகிறது - ஸுஷுப்தி - அபிமானி பிராஜ்ஞன் - ஆதலால் இந்தமூன்றவஸ்தையும் நீயன்று. அதெப்படி நானன்றென்னில் ஜாக்ரம் ஏழுபாதியுடனேகூடி விளங்குமென்றும்அது ஸ்வப்னத்திலேஅழியுமென்றும்இப்படிஉன்னாலறியப்படுகையினாலே ஜாக்ரமும்நீயன்று. ஸ்வப்னந்தான் நானேயென்னில் ஸ்வப்னமும் நீயன்று. அதெப்படி நானன்றென்னில் ஐந்து உபாதியுடனேகூடிவிளங்குமென்றும் - ஸ்வப்னஞ்ஜாக்ரத்தின்வாஸனையென்றும்மனோவியாபாரமென்றும் ஸ்வப்னம் ஸுஷுப்தியில் அழியுமென்றும் இப்படி யுன்னாலறியப்படுகையினாலே ஸ்வப்னமும் நீயன்று. ஸுஷுப்திதா

ன் நானேவென்னில் ஸுஷுப்தியும் நீயன்று, அதெப்படி நா ளன்றென்னில், பிராணனேயாதாரமென்றும் இரண்டவஸ்தைக ளுடைய வொழிவென்றும் இப்படி புன்னுலறியப் படுகையி ளுலே ஸுஷுப்தியும் நீயன்று. இனி, நானாரோவென்னில் இப்படி மூன்றவஸ்தைகளையும் உணர்ந்து அவைகழன்று உண ர்வாய் நின்று விளங்குகிற துரியங்காண் நீயாகிற ஸ்வரூபம். இந் த ஸ்வரூபத்தை ஆக்ரும் மஹாவாக்யம், சுத்ததுவம்பதார்த்த மென்றுசொல்லப்பட்டது.— துவம்பதார்த்தமுற்றிற்று,

---

## தத்பதார்த்தம்.

இனி, தத்பதார்த்தஞ்சொல்லுகிறோம். தத்பத முக்யத்தை மனனஞ்செய். அதெப்படியென்னில்ஸர்வஜ்ஞன் - ஸர்வகாரண ன் - ஸர்வாந்திரியாமி - ஸர்வேஸ்வரன் - ஸர்வ்சிருஷ்டி - ஸர்வஸ்தி தி, ஸர்வஸம்ஹாரன், இந்தத்தத்பதமுக்யமானஏழுஉபாதியுந்து வம்பதஉபாதிகள்போலமூன்றவஸ்தைகளாம். அவையெப்படி யென்னில் துரியங், காலபரம், அதீதம், இவைக்கு அபிமானிகள் விராட்புருஷன், இரணியஹர்ப்பன், அவ்யாகிருதன் - இந்தமூன் றவஸ்தையும் மூன்றபிமானியும் பரனுடையமுக்யம். ஆதலால் ஜீவனுடையஉபாதிகளாகிய மூன்றவஸ்தையுமுணர்ந்து அவைக ழன்று உணர்வானதுபோல பரனுடையவுபாதியாகியமூன்றவ ஸ்தையுமுணர்ந்து அவைகழன்று அறிவானதேபரம். ஆகையா ல்பரஜாக்ரமெதென்னில் முன்சொல்லப்பட்ட சுத்ததுவம்பதா ர்த்தமான துரியம்பரனுக்குத்தேகமாகையினுலே காரணோபாதி களேழும்இதனிடத்தேஸம்பந்தித்துவிளங்குகிறதே துரியமாகி யபரஜாக்ரம். அபிமானிவிராட்புருஷன். பரஸ்வப்னமெதென் னில் ஸர்வசிருஷ்டி - ஸர்வஸ்திதி - ஸர்வஸம்ஹாரன் - இந்தமூன்று உபாதியுடனே விளங்குகிறதேகாலபரமாகிய பரஸ்வப்னம் அபி மானி இரணியஹர்ப்பன்பரஸுஷுப்தியெதென்னில்இந்தஏழு உபாதிகளும் அந்த ஸ்வரூபத்தினிடத்திலே நிற்குதோவில்லை யோ பாரொன்றுமிடத்தில் இல்லை. இப்படியொன்றுமில்லாமல்

இருந்தவிடமேஅதீதமாகிய பரஸ்ஷுப்திஅபிமானி அவியா கிருதன் இந்தப்பரஸ்ஷுப்தியைவேதம் ஓரிடத்திலேபரமெ ன்றும் ஆகாசம்போல நிறைந்திருக்கையால் பிர்மத்தின் ஸ்வ ரூபமென்றுஞ் சொல்லும்அதுஸ்வரூபமாகாது அதெப்படியெ ன்னில் இது, பரனுக்கு உபாதியானபடியினாலே இந்தமூன்ற வஸ்தையுமுணர்ந்து அவைகழன்றுநின்றதேபரம். இப்படி, சு த்த துவம்பதார்த்தமான துரியத்திலே, காரணோபாதிகளேழுஞ் சம்பந்தித்து விளங்குகிறதே பரஜாக்ரமென் றறியப்படுகை யினாலும் பரஜாக்ரம் பரஸ்வப்னத்திலே தோன்றுமையினாலு ம் பரஜாக்ரமும் நீயன்று. மூன்றுஉபாதியுடனேகூடிவிளங்கு கிறதே பரஸ்வப்னமென் றறியப்படுகையினாலும் பரஸ்வப்னம் பரஸ்ஷுப்தியில்அழிகையினாலும் பரஸ்வப்னமும் நீயன்று. இந்தஉபாதிகளேழும் ஒழிந்துஒன்றுமில்லாம லிருந்தவிடமே பரஸ்ஷுப்தியென் றறியப் படுகையினாலும், பரஸ்ஷுப் திமேலாய்நின்றுவிளங்குகிற பரஸ்வரூபத்திலே- அழிகையினா லும் பரஸ்ஷுப்தியும்நீயன்று. இப்படிமூன்றவஸ்தையுங்க ண்டுகழன்று மேலாய்நின்றுவிளங்குகிறதே பரஸ்வரூபம். இந் தஸ்வரூபத்தைஆக்கும் மஹாவாக்யம், சுத்ததத்பதார்த்தமென் று சொல்லப்பட்டது. இந்த ஸ்வரூபம் உள்ளும்புறம்பும்போ க்கும்வரவுமின்றியே தானேதானாகி விளங்கப்படாநின்றது, அதுவேபரம். தத்பதார்த்தமுற்றிற்று.

---

அஸிபதார்த்தம்.

இப்படி, இரண்டு பதார்த்தத்தினுடைய லக்ஷ்யார்த்தப் பொருளைப் பொருந்தவருளிச் செய்தாற்போல ஆனையென் கிற பதத்திலர்த்தமும் மனனத்திலே யநுக்கிரகம்பண்ணவேண் டுமென்ன அப்படியேஇருபதப்பொருளையும்லக்ஷ்யப்பரிசாற் குற்றமற விளங்கத்தக்கதாக மனனத்திலே தரித்தபின்பு ஆனை யென்னும் பதத்தையும் பூரணமாக மனனத்திலே தரித்திரு. அதெப்படியென்னில், சீவனிடத்திலே யுண்டான, துவம்பத

உபாதி நீங்கினேனென்கிறவாஸனையிருக்கையினாலும் பரலிடத்திலுண்டானதற்பதஉபாதிநீங்கினேனென்கிறவாஸனையிருக்கையினாலுந், துவம்பதத்திலுள்ள துரிசுமூன்றையும் விட்டுத்தத்பதத்திலுள்ள துரிசுமூன்றையும் விட்டு த்ருக்காய் நின்று விளங்குகிற தத்ஸ்வரூபத்தினிடத்திலே, இரண்டு உபாதியும் ஒழிந்தபடியினாலும் விஶ்வத் தோன்றாமையினாலும் அதுவே பிரம்மமென்றுவேதஞ் சொல்லப்பட்டது. அது, எப்படியென்னில் ஸ்தூலமாய்விளங்குகிற பிரபஞ்சத்தைச் சீவன் நானென்றுகொண்டு நின்ற உபாதியை நீக்கிமுன்சுத்த துவம்பதார்த்தமான விடத்தில் காரணோபாதி ஸம்பந்திக்கையால் சுத்ததுவம்பதார்த்தம்விஶ்வக்கிராசம்பண்ணமாட்டாது விஶ்வக்கிராசமானாலொழிந்து ஐக்யங்கூடாது. ஆகையால் காரணோபாதிகழன்று விளங்காநின்ற தத்ஸ்வரூபத்தினால் விஶ்வத்தைக் கிரசிக்கையினாலே அதுவே, விஶ்வக்கிராசமென்று வேதஞ் சொல்லப்பட்டது. ஆகையால் இரண்டு பதத்தினுடைய அவஸ்தைகளும் நீங்கி ஜீவத்வமென்கிற போதமுமொழிந்து விஶ்வமெல்லாந்தன்மயமாயிருக்கிறோமென்கிற விவேகந் தத்பதத்துண்டாகையால் அதுஸம்ஸர்க்கவாக்யத்தினாலும் விசிஷ்டவாக்யத்தினாலும் நிச்சயிக்கப்பட்டுப்போகிறபொருள்இரண்டினுடையவாஸனையும் அஸிபதத்தினாலே யொழிந்து நீங்காது அதெப்படியென்னில்ஸோயந் தேவதத்தனென்கிற வாக்யத்தினாலேஇரண்டுபதத்தினுடையகாரியமுங் காரணமுங்கழன்று இதம் அசம்போய் இந்தவாஸனையுந்தீர்ந்து அகண்டபரிபூரணமாய் விளங்குகிறதுஅஸிபதம். ஆகையால் ஜீவனும், பரனும், ஜகமாயிருக்கிறஉபாதியும், ஸம்பந்தித்து வருகிற அவஸ்தையுங், கோட்பாடும், விரிவும், ஒடுக்கமுமாகிய இவையெல்லாம் ஒன்றுமின்றியே ஒழிவிலாத நிறைவாய்விளங்காநின்றயாதொருஸ்வரூபத்தைஆக்கும் மஹாவாக்யம் ஆனாமென்றது. அஸிபதார்த்தமுற்றிற்று.

குற்றமில்லாமல் மனனத்திலேதரித்த பதார்த்த சோதனையாகியபடியை ஸ்வாநுபூதியிற்காட்டவேண்டுமென்ன நிதித்யா

ஸனம் அநுக்கிரகம்பண்ணுகிறார்.—மனனமுற்றிற்று.

## நிதித்யாஸனம்.

அதெப்படியென்னில் முன்சொல்லப்பட்ட துவம்பதத்திற் காரியோபாதியினுடைய சோதனையுந்தத்பதத்திற்காரணோபாதியினுடைய சோதனையும்இரண்டு உபாதியினுடைய வாஸனாதோஷமாகியஅஸிபதத்தினுடைய சோதனையுஞ்சந்தேகமறக்கண்டுஉண்மைகாண்பதுமுடிவு. இந்த உண்மையினுடையமுடிவைக்குற்றமில்லாமல்உனக்கேற்க நீகாண விருப்பத்துடனேநிலைபெற்றுவிளங்கக்காட்டுகிறோம் நீகண்டுகொண்டுவருவாய்.

### துவம்பதார்த்தசுத்தம்.

முன்னே உனக்குச்சிரவணத்தினாலேகேள்விப்பட்டுமனனத்திலேதரித்துவிளங்குகிற துவம்பதமுக்யமான அவஸ்தைமூன்றும் அவைகண்டு கழன்றுணருகிற துரிய ஸ்வரூபத்தையுஞ் சந்தேகமறநனவிலே நீகண்டபடி சொல்லிக்காணென்னச்சொல்லுகிறான், பொறியும், புலனும், மனமேயாதாரமாக விஷயத்தைப் புசிக்கிறபோது ஜாக்ரமென்றும், விஸ்வமாயிருக்கிற உபாதியை நானென்றபிமானித்திருக்கையினால் விஸ்வனென்றுங் கண்டேன். அது, தேவரீரருளினாலே தீர்ந்ததுங் கண்டேன். ஜாக்ரத்தின் வாஸனை ஸ்வப்னமென்றும் இந்தச்சடமாகிய வாஸனையை நானென்றபிமானித்திருக்கையினால் இதற்கபிமானி தைசதனென்றுங்கண்டேன். அது, தேவரீர் அருளினாலேதீர்ந்ததுங் கண்டேன். நனவின்வாஸனையாகியகனவும் இறந்தவிடம்ஸுஷுப்தியென்றும் இந்த வெறும்பாவனையாகிய ஸுஷுப்தியைநானென்றபிமானித்திருக்கையினாலேஇதற்கபிமானிபிராஜ்ஞயனென்றுங் கண்டேன். அது, தேவரீரருளினாலே தீர்ந்ததுங் கண்டேன். இந்தப்பேரிருளாகியஸுஷுப்தியை விஷயமாயறிபுமென்னை அறிவெனக்கண்டேன். நின்னுடைய அநுக்கிரகத்தினாலே என்னைக்கண்டபின் - மூலப்பகுதியா யிருக்கின்றஸு

ஷுப்தியிறந்ததுங்கண்டேன். கண்டஸ்வரூபமெப்படியிருந்ததென்னில் - (செய்யுள் - அறிவுதானழிவின்றியேயனைத்தையுமறிந்து - முறிவதாகியமுன்புபின்பக்கமேல்கீழ்ரும்) - என்பனவொன்றுமின்றி. எங்குமாய்த்திகழ்ந்து பிறிவில்லாமல்எல்லாவற்றினுள்ளுந் தானாய் நின்றுவிளங்குகிறபடியினாலுஞ்சகலமுந்தன்னிடத்திலே தோன்றியும்,விளங்கியும்,ஒடுங்கியுந்தானேமேலாகிச் சகலத்துக்குங் காரணமாய்தேஹேந்த்ரிய கரணங்களுக்கெல்லா மேலாகித் தானே சாக்ஷியாய்நிற்கையாலும் ஒப்பிலாதவிவ்வுணர்வதேவடிவதாமென்னைத் தேவரீரருளினாலே உள்ளங்கைமணிபோற் சந்தேகமறக்கண்டேன். அமையவுன்றனைஅநுபவத்துணர்ந்தாய்ஆனபடியினாலே துவம்பதத்திற்குப் பொருள் சுத்தமாயிற்று.—துவம்பதார்த்தசுத்தமுற்றிற்று.

---

## தத்பதார்த்தசுத்தம்.

தத்பதமுக்யமான வவஸ்தை மூன்றையுங்கண்டுகழன்றுணருகிற சித்பரத்தையுஞ்சந்தேகமற நீகண்டபடிசொல்லிக்காணென்னத் தேவரீரநுக்கிரகத்தினாலேசுத்ததுவம்பதார்த்தமாயிருக்கிற துரியஸ்வரூபத்தினிடத்தில் ஸர்வஜ்ஞத்வாதிஉபாதி சம்பந்தித்துவிளங்குகிறதே பரஜாக்ரமென்றும் இதற்கபிமானி விப்வஸ்துக்கெல்லாம் ஆதாரமாகையால் விராட்புருஷனென்றுங் கண்டேன், அது தேவரீரருளினாலே ஸ்வப்னத்தி லழிந்ததுங்கண்டேன். காலபரமா யிருக்கிற ஸ்வரூபத்தைப் பார்க்குமிடத்தில் - ஸர்வஸிருஷ்டி - ஸர்வஸ்திதி - ஸர்வஸம்ஹாரன் - என்ற மூன்றுஉபாதியுடனேகூடி விளங்குகிறதே பரஸ்வப்ன மென்றும் இதற்கபிமானிஜாக்ரம்போலவியாப்தமும் ஸுஷுப்திபோல அவ்யாப்தமுமானபடியினாலே இரணியகர்ப்பனென்றுங் கண்டேன். அதுதேவரீரருளினாலே ஸுஷுப்தியி லொழிந்ததுங் கண்டேன். தத்ஸ்வரூபத்தினிடத்திலேஸர்வஜ்ஞத்வாதிஉபாதிஒழிந்ததேபரஸுஷுப்தியென்றும் இதற்கபிமானி ஒருவியாப்தமு மில்லாதபடியினாலே அவ்யாகிருத னென்றுங் கண்டேன்.

இந்த பரஸ்வஷுப்தியை வேதம் ஓரிடத்திலே பரமென்றும் ஆகாசம்போல வியாப்தமற்றிருக்கையினாலே பிர்மத்தின் ஸ்வரூபமென்றும்சொல்லப்பட்டதுங்கண்டேன் இந்தப்பரஸ்வஷுப்திக்கு மேலாய்நின்று விளங்கா நின்ற ஞானத்தைப்பரஸ்வரூபமென்றுங்கண்டேன். வியோமமாயிருக்கிறபரஸ்வஷுப்தியும் பரனிடத்திலே ஒழியக்கண்டேன். தத்பதார்த்தசுத்தமுற்றிற்று.

---

அஸிபதார்த்தசுத்தம்.

தேவரீர் அநுக்கிரகத்தினாலே வியோமமீருய மூன்றவஸ்தையுங் கபளீகரித்து நின்று விளங்கா நின்ற ஸ்வரூபத்தையுங்கண்டேன். ஞானமே வடிவாகையால் இதற்கபிமானி சித்சொரூபத்தையென்றுங் கண்டேன். தேவரீர் அநுக்கிரகத்தினாலேஇரண்டு உபாதியுந்தன்னிடத்தில்ஒழிகையினாலும் போக்குவரவின்றியே நிற்கையினாலும் இதமாயிருக்கின்ற விஸ்வமெல்லாம் விழுங்கி அகண்டபரிபூரணமாய் விளங்குகையினாலும் விஸ்வக்கிராசமென்றுங் கண்டேன் இதற்கபிமானி அசேஷமுந் தானாய்நிற்கையினாலே பிரசாபத்திய னென்றுங்கண்டேன். இப்படி சகல ஆத்மாவினுள்ளும்புறமும்முழுதும்பரிபூரணமாய்ப் பிரத்தியக்ஷமாய் விளங்குகின்றது ஸ்வரூபமென்று வேதஞ்சொல்லும். அதுதேவரீரருளினாலே(செ-ள்-பழமறைதிருமொழிப்பரிசேதராதலாதலவுலகமுண்டகம்புறமருவுஞ் - சராசராதிகண்முழுதுந்தன்னுருவமாய்)விளங்கப் படுகின்றதுவுங்கண்டேன். பேதமாயிருக்கின்ற பிரபஞ்சமெல்லாம் பிர்மநிச்சயமென்று வேதஞ்சொன்னமெய்ம்மொழிப்படியே ஜகமெல்லாமொரு தன்வடிவாய்விளங்குகின்றஸ்வரூபத்தைஜீவதுரியமுதலாகக்கொண்டுள்ளும் புறமுமாய் வருகிற உபாதி குற்றங்களெல்லாந்தீர்த்து அநுக்கிரகம்பண்ணுகையினாலே இந்த ஸ்வரூபம் ஐக்யத்திலே உபசாந்தமாம் இதனை அரிதாகிய வமல தத்பதார்த்தமென்றறிந். இப்படி வியோமத்தைக்கடந்து விஸ்வமெல்லாந் தன்மயமாய் விளங்குகிறபடியினாலே உபாதியினுடைய குற்றந்தீர்ந்

னும் இந்த வாஸினாதோஷந்தீர்க்க வேண்டுமென்றுவேதஞ்சொ ல்லும் ஆகையினால் இனியிந்த- வாஸனாதோஷந்நிருமறையை யெப்படியென்னில் உபசாந்தம் நீங்கின லொழிந்து தீராது உபசாந்தமாவதெதெதென்னில்மூலாஞானம்.மூலாஞானமெதெ ன்னில்மறைப்பு,அந்த மறைப்புத்தா னெதென்னில் தத்ஸ்வரூ பத்தைமறந்தவிடம் .தேகமாதியாக இந்த மறைப்பாகிய உப சாந்தம்அந்தமாகச் சகலமும் தன்னிடத்திலேஅடங்குகையினா லே இதற்கபிமானி பொற்புவிசாந்தனென்றும் பேராம், இரு பதத்திரிவித வவஸ்தைகள்போல விப்பதத்திரிவித வவஸ்தைய ங் கண்டேன். நன்றாய் விளங்கப்பட்டு உலகெலாம் நிறைந்த உபசாந்தமாகிய பெருமையைவேதந்தினுடையமுடிவு இன்று வவு சொல்லியும் முப்பதத்தவஸ்தை மும்மூன்றென்பது மு டிந்தஞானமென்று சொல்லியதாகையால் முப்பதமு முடி ந்தவிடத்திலே சத்யஞானவனந்தவானந்தமா யிருக்கப்படா நின்ற தத்ஸ்வரூபம் வெளிப்படுமென்று அநுக்கிரகம்பண்ணி யருளித்தே அந்த ஸ்வரூபத்தை அநுக்கிரகம்பண்ணவேண்டு மென்ன அநுக்கிரகம் பண்ணுகின்றார்.

---

அஸிபதார்த்தசுத்தம்

முற்றிற்று.

---

# தத்ஸ்வரூபம்.

அதெப்படியென்னில், இந்தமறைப்பாகிய உபசாநதந் தைக் கண்டு விளங்கப்பட்ட தத்ஸ்வரூபத்தினிடத்திலே அந்த மறப்பு நிற்குதோ வில்லையோ பாரொன்னு மிடத்தில் இல்லை, இல்லாத விடமெப்படியிருந்தது ஆதியந்தஞ்சூனியமா யிருந் தது. அந்தஸ்வரூபந்தான்காண் . அறிவில்லாததாய் அறிவுடை த்தாய் அளவிடப்படாததாய்ச்சுகஸ்வரூபியுமாயிருந்தது. அது தான்காண் . சத்யஞானவனந்தவானந்தமானது அதெப்படியெ ன்னில், ஆதியந்தஞ் சூனியமாயிருக்கப்பட்டதே பரிபூரணம் அந்தப்பரிபூரணம்எப்படியிருந்ததுபாரொன்னுமிடத்தில்என்

னுற்சொல்லப்போகாதிருந்தது. அதேதெனன்னில்மனதுக்கெட்டாதபடியினாலேவாக்கு வசனிக்கப்போகாது. ஆகையினால்வாக்குமனோதீதமென்று இரண்டையுங் கண்டு விளங்கிவந்ததே ஞானம். அந்தஞானத்தை விட்டிருந்தவிடத்திலே யாதொரு ஸ்வரூபம் நிகழ்ந்தது ஆசாரியரும் மஹாவாக்யத்தினாலேஅது நீயாகின்றாயென்றும் நீயதுவாகின்றாயென்றும் அநுக்கிரகம் பண்ணினார். அந்தஸ்வரூபந்தான் மூன்றுபதமானதுஅவையெவையென்னில்துவம்பதமுதலாகஅந்தச்ஸ்வரூபந்தான்காண்மூன்றுலக்ஷணமானதுஅவையெவையென்னில்ஜீவன்முதலாக அந்த ஸ்வரூபந்தான்காண் ஆறுகுறியும் அவையெவையென்னில்வடிவுநுண்மைமுதலாகஅந்தஸ்வரூபந்தான்காண்எட்டியல்பானதுஅவையெவையென்னில்இறந்தகேள்விமுதலாகஇப்படிஅநுக்ரகம் பண்ணப்பட்ட குருநாதன்பெருமை யாதோவென்னில் மூலயிருந்தாரைமுற்றத்தேவிட்டவர்சாலப்பெரியரொன்றுந்தீபறதவத்திற்றலைவரொன்றுந்தீபற.இவைகளை யெல்லாந் தத்வாமிர்தத்திற் கண்டுகொள்க

தத்ஸ்வரூபமுற்றிற்று.

தத்வாமிர்தக்கட்டளை

முற்றுப்பெற்றது:

(கலிவிருத்தம்.)

தொம்பதந்தத்பதந்தோன்றுமஸிபதம்............ ※
நம்பியசிவன்பரன்சிவமாய்நிற்க...................... ※
வம்பதமேலைச்சொருபமாவாக்கிய ..................※
செம்பொருளாண்டருள்சீர்நந்திதானே............※

(நேரிசைவெண்பா.)

புசிப்போஞ் சிவபோகம் பூரணமா யெங்கும்.................※
வசிப்போ முலகில் வசியோ - முசிப்பின்றி..................※
வாழ்வோஞ் சிவஞானபுணர் மாதவர்தம் பொன்னடிக்கீழ்த்....※
தாழ்வோ மெமக்கார் சரி.... .... ...................................※

# பிழை திருத்தல்.

## சிவப்பிரகாசவெண்பா.

| பக்கம் | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|---|
| ௪ | ௨௩ | ௩ | சொவிலாடால் - | சொல்லாடல் - |
| ௪௪ | ௩௪ | ௪ | யயிக்யத்தான் - | யைக்யத்தான் - |

## தத்வாமிர்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|---|
| ௬ | ௩௰ | ௧ | வையர - - | வையா - - |
| ௭ | ௨ | ௧ | மூன்றதற்கு - | மூன்றஃது - |
| ௭ | ௪ | ௩ | தெசம் - | தேசம். - |
| ௭ | ௪ | ௪ | வேட்டியல் - | வெட்டியல். - |
| ௮ | ௰௧ | ௩ | யேதமதம் - - | யேதமதம, - |
| ௰௪ | ௬ | ௨ | லேழோரனு - | லேமொரனு - |
| ௰௪ | ௭ | ௩ | மைந்தநம் - | மைந்தனம் - |
| ௰௭ | ௨௬ | ௧ | டதிதம். - - - | டதிர்தம். - - |
| ௰௯ | ௨௯ | ௩ | வலைவிலா - - | வலையிலா - |

## தத்வாமிர்தக்கட்டளை

| பக்கம். | வரி, | பிழை | திருத்தல். |
|---|---|---|---|
| ௩ | ௨ | அவைகள்யெவை - | அவைகளெவை - |
| ௭ | ௨௫ | தன்னுக்குள்ளே - | தனக்குள்ளே. - |
| ௮ | ௨ | தன்னுக்குள்ளே | தனக்குள்ளே. - |
| ௮ | ௰௨ | குதிரையும் - | குதிரையையும். - |
| ௯ | ௭ | தானுகு - | தானுக்கு. - - - |
| ௰௧ | ௯ | பார்த்தம் - - | பதார்த்தம். - |
| ௰௨ | ௰௮ | பார்த்தம் - | பதார்த்தம். |

இஃது:

ஸ்ரீ-புண்ணியகோட்டிநாயகரால்

பதிக்கப்பட்டது.

கணபதி துணை.

ஸ்வரூபானந்தஸ்வாமிகள்மேல்

தத்வராயஸ்வாமி திருவாய்மலர்ந்தருளியசாஸ்த்ரத்தில்

முதலாவது

# சிவப்ரகாச வெண்பா.

வாக்குமனங் காணாத வாசாம கோசரத்தை.................
யாக்கமழி வில்லா வறிவுருவைப் - பாக்கியத்தோ..............
ரொன்றும் பரம்பொருளை யுள்ளாமல் விள்ளாம...............
லென்றுந் துதிப்பேனி யான்..................................(க

தனையாருங் காணாத தத்ஸ்வரூபங் காணப்...................
புனையாத் திருமேனி போந்திங் - கெனையாண்ட..............
நாதன் சிவப்பிர காச னளினமலர்ப்.........................
பாதந் தொழுதேன் பரிந்து... ...............................(உ

எழுமுகிற் பெய்து மிறையத் தனைநிரம்பா. ...................
வாழிபனி நீர்நிரப்பு மாறுபோ - லூழிபல.....................
வேத மொழிந்து மறியாத மெய்ப்பொருள்யா....................
னோதுந் தமிழ்விளக்க முற்று..... ............................(ங

இனஞ்சேர் பொருள்பா விலக்கணமொன் றில்லா......................
தனந்தமொழி கொண்டாடுந் தன்மை - மனந்தனிலே.................
குற்றங்கொண் டாடாமற் ( * கோதாட்ட) வெந்தைபரன்.............
கற்றறிந்தோ ரொன்றன் கவிக்கு.............................. (ச

திரைக்கடலுட் சென்று சிதறியுடைந் தாழ்ந்த......................
மரக்கலங்கை விட்டார் மனம்போ - லிருக்குமெனக்..................
கையா வெனப்பிறவிக் கஞ்சிக் கலங்கினே...........................
னுய்யுநெறி காண வுணர்ந்து...................................(

ூய மறந்துறந்தா ரூகார முங்குறைந்தா ................................*
ுய்புநெறி யெங்கேயென் ரோடிப்போய் - வையமெலா.....*
றண்டா னுருப்புனைந்தங் கோவியம்போ லேயிருக்கக். .........*
ண்டான் விழுந்தான் கழல்.................... ....................(௬)

அஞ்சலஞ்ச லென்று வவன்மே லருள்புரியாக்.... ....................*
ஞ்சமலர்க் கண்பார்த்துக் கையமைத்துத் - தஞ்சமாப்.........*
பெற்றோ மிவனையெனப் பேரின்பங் கூர்ந்திரங்க ...............*
ுற்றான் பெருமானுரம்...... ....... ..... ..............................(௭)

தோயத்தன் றாலே சுருதி மொழிந்தபடிக் ..............................*
ாயம் பொருளாவி கைக்கொண்டு - மாயாத...........................*
போதம் புகுந்துபரி பூரணமாகத் தலையிற்................. ......*
ாதம் பதித்தான் பரன்............................................(௮)

பிள்ளை தனக்கொருவர் பேதித்தும் பேதியா... ......................*
வுள்ளபொரு ளெல்லா முணர்த்துவிக்கத் - தெள்ளும் ..........*
விழியைக் கொடுத்தருளி வேதாந்தந் தன்னை.........................*
மொழியப் புகுந்தான் முனி ............................................(௯)

உடம்புநீ யல்லை யுறக்கத்தி லெல்லா.........................................*
மடங்கப் பிணமாகை யாலே - திடம்படவும்..... ........................*
வேறுதா னுண்டோ விடாதே யருந்துகின்ற...... .....................*
சோறுகாண் காயச் சுமை ..............................................(௰)

நீடு புலனொடுங்கி னின்றே யொடுங்காம.............................*
லோடு மடங்கு முயிர்க்காற்று - வாடு ................................*
மெனக்கருவிக் கொக்குங்கா லேகாம லென்றுந்..... .........*
தனக்கறிவொன் றில்லாமற் றான்................. ..............(௰௧)

மெய்வாய்கண் மூக்குச் செவியாய் விஷயமாய்க்.......................*
கையாத மந்தக் கரணமா - யையா......................................*
பொறிபுலன்க ளென்றுபல பேரிட்டுப் போத .......................*
மதிகின்றார் றின்னையொழிந் தார்...........................................(௰௨)

